9th February 1959]

SRI M. ETHIRAJALU : தென்னாற்காடு ஜில்லாவில் குடியிருப்பதற்கு மனைகளை ஆர்ஜிதம் செய்துகொடுப்பதற்கு மனுக்கள் போடப்பட்டு, 4 வருஷங்கள் ஆகியும் இன்னும் அந்த மனுக்கள் பைசல் செய்யப்படவில்லை. ஆகவே, அவ்விதமாக வந்த மனுக்களை சீக்கிரம் இனியாவது பைசல் செய்ய வேண்டுமென்று உத்தரவு போடவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அப்படி ஏதாவது குறிப்பிட்ட இடங்களில் நிலங்களை ஆர்ஜிதம் செய்வதில் தாமதம் ஏற்பட்டிருந்தால், அதை அங்கத்தினர் என் கவனத்திற்குக் கொண்டுவந்தால், அதுபற்றித் துரிதமாக நடவடிக்கை எடுக்கும்படி ஏற்பாடு செய்யலாம்.

SRI K. V. RAMASWAMI : பொதுவாகப் பல்லடம் தாலுகாவில் பல கிராமங்களிலும், பல சேரிகளிலும் கிணறுகள் வெட்டப்பட்டிருந்தும், தண்ணீர் கிடைக்காமல் இருப்பது குறையாக இருக்கிறது. அதற்குப் பதிலாக நல்ல ஊற்று இருக்கக்கூடிய இடங்களிலே புதில் கிணறுகள் வெட்டிக் கொடுக்கப்படுமா ? அல்லது போர்கள் வைத்து அதில் தண்ணீர் கொண்டு வந்து கொடுக்கப்படுமா என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : பொதுவாக, கிணறுகளில் தண்ணீர் இல்லாமல் இருந்தால், மேலும், ஆழமாக வெட்டுவதற்கு ஏற்பாடு செய்யப்படும். வெட்டிப் பார்த்தும் தண்ணீர் இல்லை என்றால், புதியதாக வேறு இடத்தில் கிணறு வெட்டி, ஜனங்களுக்குத் தண்ணீர் கிடைக்கும்படி செய்வதுபற்றி யோசிக்கப்படும்.

*Fish-curing yards*

* 15 Q.—SRI M. ETHIRAJALU : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether there is any proposal before the Government to construct fish-curing yards through Fisheries Co-operative Societies: and

(*b*) if so, the stage at which the matter stands?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) & (*b*) There is no proposal to construct fish-curing yards through Fishermen Co-operative Societies. However, the Fishermen's Co-operative Societies and Federations requiring godown-*cum*-fish-curing yards are given each a long-term loan of Rs. 2,000 and an equal sum as subsidy for construction of small godowns and curing sheds. A statement [a] showing the names of the societies or federations, which have been granted loans and subsidies for construction of go-down-*cum*-curing sheds is placed on the table of the House.

MR. CHAIRMAN : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

II—THE MADRAS OPEN PLACES (PREVENTION OF DISFIGUREMENT) BILL, 1958 (L.C. BILL No. 8 OF 1958).

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Chairman, Sir, I beg to present the Report [b] of the Joint Select Committee on the Madras Open Places (Prevention of Disfigurement) Bill, 1958 (L.C. Bill No. 8 of 1958).

MR. CHAIRMAN : The Report is presented.

---

[a] Printed as Appendix III on pages 160-161 infra.
[b] Printed as Appendix IV on pages 161-166 infra.